VOL. XLVII. FEBRUARY 1910. No. 2.

# அருணோதயம்.

# ARUNODAYAM,

THE

## TRANQUEBAR MISSION JOURNAL.

நீ எழும்பி வெளிச்சமாகு, ஏனெனில் உன் வெளிச்சம்
உன்னண்டை வருகிறது. எசாயா 60, 1.

பொருள் அட்டவணை.


இயேசுகிறிஸ்து நமது நேசர் ... ... ... 17
இந்துக்களின் மதாசாரமும் சுகாதாரமும் ... ... 19
இந்தியாவின் நிலைமை ... ... ... 22
கிறிஸ்து மார்க்கமும் ஜன சமுதாயச் சீர்திருத்தமும் 27
ஜப்பானிய கிறிஸ்து மார்க்கத்தின் அரை நூற்றாண்டுக் கொண்டாட்டம் ... ... ... 27
பண்டிதைராமாபாயும் முக்தியும் ... ... ... 29
காருண்ணிய இராஜசக்கரவர்த்தியாகிய ஏழாம் எட்டுவர்ட்டுக்குண்டான பிராண மோசங்கள் ... 31
வர்த்தமான சங்கிரகம் ... ... ... ... 3[illegible]


PRINTED AT THE EV. LUTH. MISSION PRESS,
TRANQUEBAR.
1910.

## சகோதர விருத்தி மரண சகாயநிதி.

160 B சீர்க்காக 13வது மரண அழைப்புக்கார்டு நாளது மீ 22 உ அனுப்பப்படுகிறது. அபராதமின்றிச் செலுத்தும் தொகைக்குக் கடைசி நாள் அடுத்த பெப்ரவரி மீ 23 உ.

பாண்டூர், திருவள்ளூர்,
செங்கல்பட்டு ஜில்லா,
17 — 1 — 1910.

மா. இ. நல்லப்பா,
காரியதரிசி.


# அருணோதயம்.

தரங்கன்பாடி

மிசியோன் பத்திரிகை.

No. 2. பெபுருவரி. 1910.


## 2. இயேசு கிறிஸ்து நமது நேசர்.

"ஒருவன் தன் சிநேகிதருக்காகத் தன் பிராணனைக் கொடுக்கிற சிநேகத்திலும் அதிகமான சிநேகம் ஆருக்குமில்லே. நான் உங்களுக்குக் கற்பிக்கிற யாவையும் செய்தீர்களானல், நீங்கள் என் சிநேகிதராயிருக்கிறீர்கள்" யோவா. 15, 13. 14.

இரட்சகரின் பாடுகளைத் தியானிக்கும் தவசுகாலத்துக் குட்படும் நமக்கு இயேசு நமது நேசர் என்னும் இத்தியானம் மிகவும் அருமையானது.

மானிட ஜீவியத்தை மதுரமாக்குவது நேசமே. ஆயினும் நாம் நம்பக்கூடியவரும், நம்மோடு உறவாடி, நமது உள்ளத்திலுள்ளதையெல்லாம் நாம் சொல்லிக்கொள்ள நமக்குச் செவிசாய்க்கிறவருமாகிய ஓர் நேசர் கிடைப்பது அபூர்வம். உண்மையாகவே அவ்வித நேசரை மனித ஜாதியில் எவ்வளவாய் விரும்பித் தேடினுலுங் காண முடியாது. பரலோகத்திலிருந்து வந்த இயேசுவோ அவ்வகை நேசர். நமது சிநேகத்தைத் தாம் பெற்றுக்கொள்ளவும் தம்மை நமது நேசரெனக் காட்டவுமே அவர் இவ்வுலகில் ஜீவித்தார், பாடுபட்டார், மரணமடைந்தார், தமது ஜீவனை நமக்காகத் தத்தம் பண்ணினர். பண்ணியும் மரித்தோரிடத்திலிருந்து உயிர்த்தெழுந்து தமது பேரில் நம்பிக்கை வைப்பவரனைவருக்கும் நேசராய் இப்போது விளங்குகிறர்.

நமக்குத் தேவையானவைகளைத்தர அவர் சத்துவமும் சித்தமுமுள்ளவராதலால் அவைகளை அவரிடத்தில் தான் பெற்றுக்கொள்ள நாம் எதிர்பார்க்க வேண்டும். நமது விண்ணப்பங்களைக் கேட்கவும், நம்மை விடுவிக்கவும், நமக்கு ஆலோசனை தர

வும் அவர் ஆயத்தமாயிருப்பதால், நமது சகல உபத்திரவங்க
ளோடும் நாம் அவரிடந் தான் செல்லவேண்டும். எந்தக் குறை
வையும் இயேசுவுக்கு அறிவியாமல் நாம் மறைத்து வைக்கலா
காது. தமது சனத்தின் சமாதானத்தையும், வாழ்வையும், சந்
தோஷத்தையுங் கெடுக்கிற எதையும் தமது கவனிப்புக்குக்
கீழ்த்தரமானதென்று அவர் நினைக்கிறதே இல்லை.

நம்மை உபத்திரவப்படுத்துகிற ஒவ்வொரு சிறு காரியத்
தைப் பற்றியும் அவர் அக்கறையுடையவர். நமது அன்றாடக
அல்லல்களையும் தொல்லைகளையும் நாம் அவரது செவிகளில் இரக
சியமாய்ச் சொல்லவேண்டுமென்று அவர் விரும்புகிறார். இப்
படிச் செய்யாமல் நமக்கு நேரிடும் சிறு உபத்திரவங்களை இயேசு
வினிடம் சொல்லுவது அவருக்கு அனாவசியமான அலட்டுதல்
தருமென்று உத்தேசித்து அவைகளை நாமே சுமந்து சகித்துக்
கொள்ள முயலுவதால், அச்சிறு உபத்திரவங்கள் அடிக்கடி பெரி
தாகி நம்மை வதைக்கின்றன. நமது காரியங்களை அவரிடங்
கொண்டு செல்லுதல் அவருக்கு ஒருபோதும் தொந்தரவா
யிராது. அதற்கு மாறாக அவரையன்றி ஒன்றைச் செய்ய நாம்
முயற்சிக்கும் பொழுதும் அவருடைய உதவியைத் தேடாமல்
நமது உபத்திரவங்களை நாம் சகிக்க முயலும் பொழுதுமே நாம்
அவருக்குப் பிரியப்படாதவர்களாவோம். நாம் கிறிஸ்துவினிட
மாத்திரம் அந்நியோந்நியமாயிருப்பது நமக்கு எப்போதும் நலம்.
நாம் சிருஷ்டியாகிய மனிதனை நம்பினாலோ அவன் நம்மை
பெரும்பாலும் வஞ்சிப்பான். இயேசுவானவர் ஒருபோதும் நம
மை வஞ்சியார். சிருஷ்டியின் பேரில் சாருகிறவன் நெரிந்த
நாணலின்மேல் சாருகிறான். இயேசுதான் நித்திய கன்மலையா
யிருக்கிறார். ஆத்துமாவே! இயேசுவை உன் நேசர் ஆக்கிக்
கொள். நீ அடிக்கடி அவரைச் சந்தித்துத் தாராளமாய் அவ
ரோடு உறவாடித் திடமாக அவரை நம்பி அவருடைய நேசனா
யிரு.

"உங்களையோ சிநேகிதர் என்றேன்; ஏனெனில் நான்
என் பிதாவினாலே கேள்வியானதெல்லாவற்றையும் உங்களுக்கு
அறிவித்தேன்." யோவா. 15, 15.

ஒப்பில்லா வல்ல மீட்பர்!
மாநேசர்! என் நேசர்!
ஒப்பில்லா வல்ல மீட்பர்!
என் இயேசுவைப்பார்
என் துணையாக நிற்கிறார்
ஒப்பில்லா வல்ல மீட்பர்
எத்தீங்குமின்றிக் காக்கிறார்
ஒப்பில்லா வல்ல மீட்பர்!

C. I. S.



## இந்துக்களின் மதாசாரமும் சுகாதாரமும்.

(முடிவு.)

5. உருத்திராக்ஷந்தரித்தல். இது சிவ மதஸ்தருக்கு மாத்திரம் அடுத்த ஆசாரம். உருத்திராக்ஷம் என்பது ஒரு மரத்தின் கொட்டை. அது எத்தனைக்குச் சத்துள்ளதாயிருக்குதோ அத்தனைக்குச் சிவந்திருக்கும். அதின் முகங்கள் எத்தனைக்குக் குறைந்திருக்கிறதோ, எத்தனைக்குப் பருத்துச் சிவந்திருக்கிறதோ அத்தனைக்குக் காரமுள்ளதும் விலை உயர்ந்ததுமாயிருக்கும். இதன் ஞான சக்தியைக் குறித்து ஒரு வித்துவான், "சிவனே ருத்திராக்ஷத்தை அணிந்துகொண்டால் அதின் பெருமையைக்குறித்துச் சொல்லவும் வேண்டுமோ" என்கிறான். இருக்கட்டும். அதின் கை கண்ட பிரயோஜனத்தைப் பார்ப்போம். நாவறட்சி, விக்குள், சிலேர்ப்பனம் என்ற வியாதிகளை நீக்கக்கூடிய மருந்துகளில் இது முக்கியமானது. ஆகையால் சிவமதஸ்தர்கள் இதை வழக்கமாய் மேற்கூறிய வியாதிகளுக்கு ஸ்தானமாகிய கழுத்திலுந் தொண்டைக் குழியிலும் மார்பிலும் கயிற்றிற் கோத்து ஒற்றையாகவும், மாலையாகவும் அணிவார்கள். இதன் காரம் தினந்தோறும் ஷ இடங்களில் படுவதால் மேற்சொல்லிய வியாதிகள் வராதபடி தடையுண்டு.

6. தீட்டு. இச்சொல்லுக்கு ஆசூசம், அசுத்தம் என்பது அர்த்தம். தொடுவதாலும் சுவாசிப்பதாலும் வரக்கூடிய அசுத்தமெல்லாம் தீட்டு. சில தீட்டுகள் வியாதியையும், சில தீட்டுகள் மரணத்தையும் உண்டுபண்ணும். 3 மோசே 11 முதல் 15 முடிய, கர்த்தர் விலக்கியிருக்குந் தீட்டுகளுக்கும், இந்துக்கள் விலகும் அநேகந் தீட்டுகளுக்கும் மிகுந்த ஒற்றுமையும் சுகாதார அஸ்திவாரமும் உண்டு. இஸ்ரவேலரின் தீட்டுகள் அவர்கள் உள்ளான பரிசுத்தத்தை நாடுவதற்குக் குறிப்புகளாகவும், யூத ஜனசமூகம் நோய்க்கும் அகால மரணத்துக்குந் தப்பிச் செழித்தோங்க எச்சரிப்பான சாதனங்களாகவுமிருந்தன. இந்துக்களுடைய தீட்டுகளில் வெகுவானவைகள் சுகாதாரத்தைமாத்திரம் பொறுத்தனவென்று திட்டமாய்ச் சொல்லலாம்.

ஜாதி வித்தியாசத்தால் வருந்தீட்டானது தீட்டாயிருக்க முடியாதென்று சொல்லவருங் கட்சியாருங் கிறிஸ்தவர்களில் உண்டு. அப்படிப்பட்டவர்கள், இஸ்ரவேலர் புறச்சாதியாரைத் தொடவும், அவர்களோடு புசித்துக் குடிக்கவும் வேண்டாமென்று கர்த்தர் கொடுத்த கட்டளையின் கருத்தைச் சற்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். அந்நிய ஜாதிப்பெண்களைக் கட்டிய சாலமோன் இராஜனுக்கு ஆத்தும விஷயமாய் எத்தனை பெரிய மோசம் உண்டாயிற்றென்பதைச் சரித்திரத்தால் அறிவோம்.

தொட்டதுக்கெல்லாந் தீட்டு தீட்டு என்று கதறுகிற இந்து மேன்குலத்தாரில் எத்தனை பெயர் தங்களில் தாழ்ந்த எளியோரான ஸ்திரிகளைப் படைத்துக் குடும்பத்துக்குத் துன்பத்தையும், ஜன சமூகத்துக்கு இலச்சையையும் உண்டுபண்ணி வருகிறார்கள். இவ்விதக் கஷ்ட நஷ்டங்களுக்கு ஜாதித் தீட்டானது இந்து மதஸ்தருக்குள் ஒரு தடையாயிருப்பது நல்லதே. சுகவழியை ஆதாரமாகக்கொண்டு ஏற்பட்டுள்ள தீட்டுகளை இந்துக்கள் சரிவரக் கவனித்துத் தேக சுகமும் நல்வாழ்க்கையும் ஆயுள் விர்த்தியும் அடையும்பொருட்டு பெரியோராகிய ஞானிகள் அத்தீட்டுகள் தெய்வங்களுக்காகா வென்றும், வீட்டைத் துடைத்துப் போடும் என்றும் பயமுறுத்திவைத்தார்கள்.

ஜாதித் தீட்டொழிந்த மற்றத் தீட்டுகள் நமது சுகத்துக்கும் வாழ்வுக்கும் விக்கினமானவைகள் என்றறியும் கிறிஸ்தவர்கள் அத்தீட்டுகளுக்குக் கூக்குரலின்றி அமைதலாய் விலகியிருக்கச் சுக நூலால் கட்டுப்பட்டவர்கள். பரிசுத்தமுஞ் சிநேகமுமுள்ள இயேசுவைக்கண்ணோக்கி நடக்குங்கிறிஸ்தவர்கள் தொட்டுக்கொள்வதால் வரும் ஜாதித் தீட்டைத்தீட்டாக எண்ணார்கள். எண்ணவுங்கூடாது. சுத்தம், அசுத்தம் என்பவற்றை மாத்திரங் கவனித்து நடப்பார்கள்.

7. **மாரியம்மனும் வேப்பிலையும்.** ஒரு வீட்டில் வைசூரி வார்த்தால் அவ்வியாதி ஒவ்வொரு ஊரிலும் வசிக்கும் மாரியம்மன் என்ற தேவதையால் அது வந்ததென்று எண்ணி அவள் கோபத்தைத் தணிக்க அவளுக்குப் பிரியமான இலை என்று சொல்லப்படும் வேப்பிலையை வீட்டின் முகப்பில் சொருகுவார்கள். தொத்து நோயுள்ள ஊர்களின் வழியாய்ப் பிரயாணஞ் செய்யுங் காலத்தில் கால் நடையாய்ப் போகிறவர்கள் வேப்பிலைக் கொத்தைக் கையில் பிடித்து நடப்பார்கள். வண்டியேறிப்போகிறவர்கள் கூண்டில் முன்னும் பின்னும் மேற்படி இலையைச் சொருகிவைப்பார்கள். வைசூரி வார்த்தவர்களுக்குக் கொப்புளங்களில் அரிப்புண்டாகும்போது அதை ஆற்றிக்கொள்ளும்படியாக அவ்வியாதிக்காரருக்கு வேப்பிலையைக் கொடுப்பார்கள். அவ்விலையின் ஓரங்கள் பல்பல்லாயிருப்பதால் கொப்புளங்களையுடைக்காமல் அவைகளை மெதுவாய்ச் சுறண்டும். இந்த இலையின் வாடை உடம்பிற் படப்படக் கொப்புளங்களில் உள்ள பூச்சிகள் பெலவீனப்பட்டுச் சாகும். வைசூரி இறங்கினபின் இரணங்களில் இந்த இலையையும் மஞ்சளையும் அரைத்துப் போடுவார்கள். இதினால் அவ்விரணங்களில் உள்ள பூச்சிகள் செத்து இரணங்கள் சீக்கிர மாறும்.

ஒரு வீட்டில் பிரசவம் நடந்தால் தீட்டுக்கழிக்குமட்டும் முன் சொன்னபடியே அவ்வீட்டில் வேப்பிலையைச் சொருகுவார்



கள். வாந்திபேதி முதலிய தொத்து வியாதி காலங்களிலும் அப்படியே செய்வார்கள். ஜனங்கள் தங்கள் வியாதி காலங்களில் இவ்விலையை விடாமல் உபயோகிக்கும்படிக்கு இப்படிப்பட்ட வியாதிகள் மாரியம்மனால் உண்டாகின்றன வென்றும், அவள் கோபத்தையாற்ற இந்த இலையைக் கையாடவேண்டுமென்றும் அறிவாளிகள் ஜீவகாருண்ணியத்தினால் புகுத்திவிட்டார்கள்.

வைசூரி, வாந்திபேதி முதலிய தொத்து வியாதி காலங்களில் மாரியம்மன் ஒரு குடத்தில் வாசஞ்செய்வதாகப் பாவித்து அக்குடத்தின் வாயில் வேப்பிலைகளைச் சொருகிப் பூசாரி அதைத் தலையிற் சுமந்து, கையில் நெருப்புச்சட்டி தூக்கி ஆவேசங்கொண்டு, ஊரைச் சுற்றி வருவான். ஜனங்கள் அந்தக் கரகத்தைக் கும்பிட்டுக் கற்பூரங்கொளுத்துவார்கள். பூசாரியோ அப்படிச் செய்பவர்களுக்கு வேப்பிலை கலந்த விபூதியைக் கொடுப்பான்.

இந்தக் கரகம் வருவதற்கு முன்னுக ஜனங்கள் தங்கள் தங்கள் தெருவாசல்களைச் சுத்தம்பண்ணி, தண்ணீர் தெளித்து வைப்பார்கள். இப்படிச் செய்வதால் முழுத்தெருவும் ஊருஞ் சுத்தமாகும். மாரியம்மனுக்குச் செய்யப்படுகிறதாக ஜனங்கள் நம்பும் வேப்பிலை சொருகுதல் முதலிய சடங்குகளால் அவர்களுக்குண்டாகும் பிரயோசனங்களாவன.

a. வேப்பிலையின் கசப்பால் வைசூரிப் பூச்சிகள் சாகும்.

b. வேப்பிலை எங்கே சொருகப்படுகிறதோ அங்கே நோய்க்குரிய பல கிருமிகள் நாசமடையும்.

c. எந்த வீட்டில் வேப்பிலை சொருகியிருக்கிறதோ அந்த வீட்டிற்கு மற்றவர்கள் வருவது சுகக்கேடு என்று எச்சரிக்கிற ஒரு குறிப்பாயிருக்கிறது.

d. அந்த வீட்டுக்காரரை வாதை அணுகியிருப்பதால் அவர்களிடம் பிச்சைக்காரரும் விருந்தினரும் அவ்வீட்டாரைத் தொந்தரவு செய்யக்கூடாதென்று வேப்பிலை காண்பிக்கிறது.

e. அந்த வீட்டாருக்கு எந்தப்பொருளையும் பிறர் கொடுக்கலாமே ஒழிய அந்த வீட்டிலிருந்து எந்தப்பண்டமும் வாங்கக்கூடாது. வாங்கினவர்களை வியாதி தொத்தும்.

f. கரகத்தில் வருகிற மாரியம்மனுக்கென்று வீடுகளையுந் தெருக்களையுஞ் சுத்தம் பண்ணுவதால் ஊர் சுத்திகரிக்கப்படும்.

g. நெருப்பு வளர்ப்பதாலும், வீடுகள்தோறுஞ் சூடங் கொளுத்துவதாலும் ஊரின் ஆகாயஞ் சுத்தமாகும்.

h. விஷமிறக்கல், பேயோட்டல் முதலிய காரியங்களில் வெகுவாய் மந்திரத்தை விட வேப்பிலையின் வாடை சுகமளிக்கிறதுண்டு.

இந்திய கிறிஸ்தவர்கள் கலியாணப் பந்தல்கால் (காவணக்கால்) நாட்டலும், தாலி கட்டலும் இன்னுஞ் சில ஆசாரங்களும் அவர்களுக்கு அஞ்ஞான மார்க்கத்திலிருந்து வந்த வழக்கங்களாம். ஒர்வேளை இவைகளைச் சேதமின்றி ஒழித்தாலும் ஒழிக்கலாம். ஆனால் தொத்து வியாதி காலங்களில் கிறிஸ்தவர்கள் வேப்பிலையைக் கையாடுவது அத்தியாவசியம். அஞ்ஞானிகள் அப்படிச் செய்வதால் கிறிஸ்தவர்கள் செய்யப்படாது என்பது எள்ளளவும் பொருந்தாத நியாயம். அவர்கள் அறிவீனத்தோடும் வீண்பக்தியோடுஞ் செய்வதை நாம் புத்தியோடும் பக்தியோடுஞ் செய்யவேண்டும். அறிவீனரும் பெலவீனருமாகிய கிறிஸ்தவர்களுக்கு இது விஷயத்தில் தெளிவுண்டாகும்படி போதனை செய்யவேண்டும்.

அஞ்ஞானிகள் செய்வதுபோல தொத்து வியாதி காலங்களில் வேப்பிலையை வீட்டின் முன் புறத்தில் மாத்திரமல்ல உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் அதைச் சொருகக்கூடிய எல்லா இடங்களிலும் சொருகவும் தொங்கவிடவும் வேண்டும். தொத்து வியாதி நீங்குமட்டும் காய்ந்த இலைகளை நீக்கிப் புதிய இலைகளை உபயோகிக்க வேண்டும். வீட்டுக்குச் சமீபத்தில் இடமுள்ளவர்கள் வேப்பமரம் வைத்துப் பயிராக்குவது எக்காலத்திலும் நல்லது.

இந்துக்கள் தங்கள் தெய்வங்களுக்குச் சாத்தும் இலைகளும் புஷ்பங்களும், சந்தனம், பச்சைக் கர்ப்பூரம், சாம்பிராணி, கூடம் ௸ வாசனைத்திரவியங்களும் தெய்வங்களுக்குத் திருப்தியை அளிக்காமல் அவைகளைக் கையாடும் குருக்கள் ௸ கோவிலூழியருக்குத் தேக ஆரோக்கியத்தைத் தரும் சாதனங்களாய் மாத்திரமிருக்கின்றன வென்பதை எளிதில் அறிந்துகொள்ளலாம்.

V. D.

## இந்தியாவின் நிலைமை *)

1. இந்துதேசத்தின் பரப்பு 17 லட்சத்து 66 ஆயிரத்து ஐந்நூற்று தொண்ணூற்றேழு சதுரமைல்.

2. சுதேச நாடுகள் உட்பட இந்துதேசத்தின் ஜனத்தொகை 29 கோடியே 43 லட்சத்து 61 ஆயிரத்து ஐம்பத்தாறு. உலகத்தின் ஜனத்தொகையில் ஐந்தில் ஒருவன் இந்தியன்.

3. இந்தியாவில் நிமிஷத்துக்கு 20 பேரும் மாதத்துக்கு 8 லட்சம் ஜனமும் நித்தியத்தில் பிரவேசிக்கிறார்கள்.

*) 1901-ம் வருஷத்திய ஜனசங்கியைக் கணக்கை ஆதாரமாகக்கொண்டது.



4. இந்தியாவின் பாஷைகள். 147.

| முக்கிய பாஷை | | பேசுவோர் |
|---|---|---|
| இந்தி பாஷை | ... | 7 கோடியே 12 லட்சத்து 72 ஆயிரம். |
| பங்காளி | ... | 4 கோடியே 46 லட்சத்து 24 ஆயிரம். |
| பேஹாரி | ... | 3 கோடியே 70 லட்சத்து 77 ஆயிரம். |
| தெலுங்கு | ... | 2 கோடியே 6 லட்சத்து 97 ஆயிரம். |
| மராத்தி | ... | 1 கோடியே 82 லட்சத்து 38 ஆயிரம். |
| பஞ்சாபி | ... | 1 கோடியே 70 லட்சத்து 71 ஆயிரம். |
| தமிழ் | ... | 1 கோடியே 65 லட்சத்து 25 ஆயிரம். |
| கன்னடம் | ... | 1 கோடியே 3 லட்சத்து 65 ஆயிரம். |
| குஜரத்தி | ... | ... 99 லட்சத்து 28 ஆயிரம். |
| உரியா | ... | ... 96 லட்சத்து 87 ஆயிரம். |
| பர்மியா | ... | ... 74 லட்சத்து 75 ஆயிரம். |
| மலையாளம் | ... | ... 60 லட்சத்து 29 ஆயிரம். |
| சிந்தி பாஷை | ... | ... 30 லட்சத்து 6 ஆயிரம் |
| அசாமிஸ் | ... | ... I3 லட்சத்து 51 ஆயிரம். |

5. ஜனசமூகம். 29 கோடியே 40 லட்சம் ஜனத்தொகையில் ஆண்கள் 14 கோடியே 90 லட்சம்; பெண்கள் 14 கோடியே 40 லட்சம்.

செவிடூமைகள் லட்சத்து 53 ஆயிரத்து நூற்றறுபத்தெட்டு.

குருடர் 3 லட்சத்து 54 ஆயிரத்து நூற்று நாலு.

குஷ்டரோகிகள் 97 ஆயிரத்து முந்நூற்று நாற்பது. இவர்களுக்காக ஏற்பட்ட தர்மஸ்தாபனங்கள் கிறிஸ்தவர்களால் நடத்தப்பட்டு வருகின்றன.

6. கல்வி. படித்தோர் 1000 க்கு 98 ஆண்களும், 1000 க்கு 7 பெண்களும். மீதி படியாதோர். ஆண்களில் எழுதவாசிக்கத் தெரிந்தவர்கள் 1 கோடியே 46 லட்சத்து 90 ஆயிரம் பெண்களில் 9 லட்சத்து 96 ஆயிரம் பேர் மாத்திரம் எழுதவாசிக்கத் தெரிந்தவர்கள். 100 க்கு 23 பையன்களும், 100 க்கு 3 பெண்பிள்ளைகளும் பள்ளிக்கூடம் போவோர். ஜப்பானில் 100 க்கு 80 பிள்ளைகள் பள்ளிக்கூடம் போகிறார்களாம்.

7. ஜாதி 2300 க்குஅதிகமான ஜாதிபேதங்களுண்டு. நீச ஜாதிகளாக எண்ணப்படுவோர் 5 கோடி ஜனம்.

8. மார்க்கமும் பெண் கல்வியும் } இந்தியாவி லுள்ள மார்க்கங்களின்படி பெண்களின் படிப்பைப் பார்த்தால், பார்சிகளில் 1000 க்கு 538 பெண்களும், கிறிஸ்த

வர்களில் 125 பெண்களும், புத்தர்களில் 42 பெண்களும் சமண ரில் 18 பெண்களும், சீக்கியரில் 7 பெண்களும், இந்துக்களில் 5 பெண்களும் மகமதியரில் 3 பெண்களும் படித்தவர்கள்.

9. 4 கோடி இஸ்திரிகள் நாட்டுவளப்பந் தெரியாத கிணற்றுத் தவளைகள்போல் அந்தர்ப்புரங்களில் அடைபட்டிருக்கிறார்கள்.

10. மனைவிகள். பத்து வயதுக்குட்பட்டவர்கள் 22 லட்சத்து 73 ஆயிரத்து இருநூற்று நாற்பத்தைந்து.

ஐந்துவயதுக்குட்பட்டவர்கள் 2 லட்சத்து 43 ஆயிரத்து ஐந்நூற்று மூன்று.

ஒரு வயதுக்குட்பட்டவர்கள் 10 ஆயிரத்து ஐந்நூற்றேழு. பங்காளத்தில் இவ்வகுப்பார் 3164.

11. கைம்மைகள் 14 கோடி 40 லட்சம் பெண்களில் 2 கோடி 60 லட்சம் பேர் விதவைகள். இத்தொகை ஜெர்மன் இராச்சியத்தின் ஜனத்தொகையில் பாதி. இந்தியாவில் ஆறு பெண்களுக்கு ஒருத்தி விதவை.

பதினைந்து வயதுக்குட்பட்ட விதவைகள் 3 லட்சத்து 91 ஆயிரத்து நூற்று நாற்பத்தேழு.

பத்து வயதுக்குட்பட்டவர்கள் லட்சத்து 15 ஆயிரத்து இருநூற்று எண்பத்தைந்து.

ஐந்து வயதுக்குட்பட்டவர்கள் 19 ஆயிரத்து நானூற்று எண்பத்தேழு.

ஒரு வருஷத்துக்குட்பட்ட குழந்தை விதவைகள் 1064.

12. தேவ தாசிகள் லட்சத்து 10 ஆயிரம். வேசிகள் 58,000.

13. மதம். இந்தியாவின் முக்கியமார்க்கங்கள். (a) யூதமார்க்கம். (b) பார்சிமதம். (c) சமணமதம். (d) பூதவணக்கமதம். (e) மகம்மதுமார்க்கம். (f) இந்துமார்க்கம். (g) கிறிஸ்துமார்க்கம்.

| | | |
|---|---|---|
| யூதர். ... | பம்பாய். ... | 18 ஆயிரம். |
| பார்சிஸ். ... | பம்பாய். ... | 94 ஆயிரம். |
| பூதவணக்கத்தார். | பங்காளம், சென்னை, மத்திம மாகாணங்களில் வசிக்கும் சாந்தலர் பீலர் கோன்ட்ஸ். அஸ்ஸாமிலுள்ள காரோஸ், காசிஸ், நாகாஸ். பர்மாவிலுள்ள ச்சின்ஸ், கச்சின்ஸ், கேரன்ஸ். | 87 லட்சத்து 11 ஆயிரம். |



| | | |
|---|---|---|
| சீக்கியர். ... | பஞ்சாபு. ... | 21 லட்சத்து 95 ஆயிரம். |
| கிறிஸ்தவர்.... | சென்னை. ஜில். ... | 29 லட்சத்து 23 ஆயிரம். |
| சமணர். ... | பம்பாய் இராஜபுத: மத்திய இந்தி: | 13 லட்சத்து 34 ஆயிரம். |
| புத்த சமயிகள். | பர்மா. ... | 94 லட்சத்து 77 ஆயிரம். |
| மகம்மதியர். | பங்காளம் ஜில். | 6 கோடியே 24 லட்சத்து 58 ஆயிரம். |
| இந்துக்கள். | பஞ்சாப், வடமேற்கு மாகாணம் காஷ்மீர் பர்மா தவிர மற்றைய இடங்கள். | 20 கோடியே 71 லட்சத்து 46 ஆயிரம். |

ஜனத்தொகையில் 100 க்கு 71 இந்துக்களும், 21 மகம்மதியரும், 3 புத்த சமயிகளும், 3 பூதவணக்கத்தாரும், 1 கிறிஸ்தவருமாம்.

14. இந்துதேச கிறிஸ்தவ நிலைமை. 29 லட்சத்து 23 ஆயிரம் கிறிஸ்தவர்களில் 26 லட்சத்து 60 ஆயிரம் சுதேசிகள். இச்சுதேசிகளில் ரோமன் கத்தோலிக்கர் 11 லட்சத்து 23 ஆயிரம், சீரியன் கிறிஸ்தவர்கள் 5 லட்சத்து 71 ஆயிரம், புரோடெஸ்தாந்தர் 9 லட்சத்து 70 ஆயிரம்.

15. கிறிஸ்து மார்க்கத்தால் விளைந்த பலன். அநேகர் கிறிஸ்துவின் தொழத்தில் சேர்ந்தார்கள். உடன் கட்டை ஏறல், சிசு வதை முதலிய கொடிய பழக்கங்கள் நின்றன. கேவல ஜாதிகள் உயர்ந்தன. நிர்ப்பந்த பாலிய விதவைகள் சுயாதீனமும் அறிவும் அடைந்தனர். இதற்காகப் பண்டித ராமாபாய் ஏற்படுத்திய தர்மஸ்தாபனம் 1500 அனாத பிள்ளைகளையும், குழந்தை விதவைகளையும் ஆதரித்து வருகிறது முதல் முதல் ஸ்தாபித்த இங்கிலிஷ் பள்ளிக்கூடமும், முந்திய பெண்பிள்ளைகள் பள்ளிக்கூடமும், முந்த முந்த ஏற்பாடான ஆதரிப்புப்பாடசாலைகளும் கிறிஸ்தவ மிசியோனரிகளால்தான் உண்டாயின. இந்தியாவில் உயர் தரக் கல்வி பரிபாலனத்தில் பத்தில் ஒருபங்கு கிறிஸ்தவராதீனத்திலிருக்கிறது. மெற்றிரிக்குலேஷன் பரீட்சை கொடுத்தவர்களில் 10 க்கு ஒருவனும், F. A. கொடுத்தவர்களில் 5 க்கு ஒருவனும், B. A. கொடுத்தவர்களில் 4 க்கு ஒருவனும் புரோடெஸ்தாந்து கல்விச்சாலையில் படித்தவன். பள்ளிக்கூடம் போகும் 4 கோடி பிள்ளைகளில் 4 லட்சம்பேர் பெண்பிள்ளைகள். இவர்களில் மூன்றில் ஒரு பங்கு மிஷன் பள்ளிக்கூடங்களில் படிக்கிறவர்கள்.

16. இந்தியாவின் சில இடங்களில் கிறிஸ்தவ சபை சுயபரிபாலன சபைகளாக விர்த்தியடைந்துவருகிறது. மிச்சமான

சுதேச குருக்களின் சம்பளங்களை அந்தந்தச் சபைகளே கொடுத்துவருகிறது.

17. மிசியோன்களின் நிலைமை. இந்தியாவின் ஜனத்தொகை 100 க்கு 99 பேர் கிறிஸ்துவின் பேரைக்கூட அறியாதவர்.

குவாலியரிலுள்ள 20 லட்சம் பேருக்குக் கிறிஸ்துவின் சுவிசேஷந் தெரியாமலே இருக்கிறது. மத்திய இந்தியாவில் கிறிஸ்தவ வேலையாளே இல்லை. மத்திம மாகாணத்தில் 20 லட்சத்துக்கு 576 பேர் மாத்திரம் கிறிஸ்தவர்கள். ஒவ்வொரு தாலுக்காவிலும் 50 ஆயிரம் ஆத்துமாக்களுள்ள முப்பது தாலுக்காக்கள் அடங்கிய பம்பாயில் ஒரு கிறிஸ்தவனும் இல்லை. ஆயிரக்கணக்கான கிராமங்களில் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படவே இல்லை. பங்காளத்தில் மாத்திரம் சுவிசேஷ தொனியைக் கேட்காத 4 கோடி ஜனங்கள் இருக்கிறார்கள். இப்போதிருக்கிற மிசியோன் சங்கங்களின் வேலையினால் எட்டக்கூடாமலும் தங்கள் ஜீவகாலமெல்லாம் சுவிசேஷத்தைக் கேட்கக்கூடாமலுமிருக்கும் 10 கோடி ஜனங்கள் உண்டு.

இன்னும் இந்தியாவுக்குத் தேவையானதென்ன?

(a) இந்தியர்களே போதகர்களாகவும் சுவிசேஷகர்களாகவும் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படாத இடங்களுக்குப் போகவேண்டும்.

(b) ஜனத்தொகையில் 100க்கு 95 நிரக்ஷரகுக்ஷிகளாயிருக்கிறவர்களின் கண்களையும் மனதையுந் திறந்துவிட படிப்பாளிகளும், தேவபக்தர்களுமான போதகர்களும், அவ்வேலைக்குத் தங்களையே தத்தம்பண்ணுகிற உபாத்திமார்களும் வேண்டும்.

(c) சுவிசேஷ வெளிச்சத்தை, இருளடைந்த அந்தர்ப்புர இஸ்திரிகளுக்குக் கொண்டுபோம்படியாகத் தங்களையே தத்தம் பண்ணுகிற இஸ்திரிகள் தேவை.

ஆகையால் இந்திய கிறிஸ்தவர்கள் செய்யவேண்டிய காரியங்கள் மூன்று.

1. தேவராச்சிய பரம்புதலுக்காகச் செபிக்கவேண்டும்.

2. அதற்காகத் தங்களுக்குள்ளதை மனப்பூர்வமாய்க் கொடுக்கவேண்டும்.

3. தாங்களே அவ்வேலைக்குப்போகவேண்டும்.

சுருக்கிச் சொன்னால் இந்திய கிறிஸ்தவர்களின் கடமை, ஜெபி, கொடு, போ என்னும் முச்சொற்களில் அடங்கும்.

I. & MS.



## கிறிஸ்து மார்க்கமும் ஜன சமுதாயச் சீர்திருத்தமும்.

கிறிஸ்து மார்க்கம் ஜன சமூகத்தைச் சீர் திருத்துவதெப்படி? என்னும் கேள்விக்கு ஒரு ஜப்பான் இரக்ஷண்ணிய சேனை உத்தியோகஸ்தர் கொடுத்த விடை பின் வருமாறு.

1. கிறிஸ்து மார்க்கம் தேவனை ஜனசமூகத்துக்குள் கொண்டு வருகிறது. தேவ பயம் மனுஷனைத் தீமைக்கு விலக்கும்.

2. கிறிஸ்து மார்க்கம் சகல தீமையையும் விரோதித்து நன்மைசெய்யச் சத்துவமளிக்கிறது.

3. அது சிநேகத்தை ஜன சமூகத்தின் பிரமாணமாக்குகிறது. சுய நயம் பாராட்டலே உலகத்தின் சகல பாவத்திற்கும் நிர்ப்பந்தத்திற்கும் காரணம். மனுஷ ஜீவியத்தை அன்பு ஆண்டுகொண்டால் ஜன சமூகத்தின் சகல தீமைகளுக்கும் முடிவுண்டாகும்.

4. கிறிஸ்து மார்க்கம் பரிசுத்தத்தை முக்கியப்படுத்தும்.

5. அது ஏழைகளையும் பெலவீனரையுந் தாங்கியாதரிக்கும்.

6. அது உலகரக்ஷிப்புக்காகப் பிழைத்து மரித்த மேலான இலக்கும் தேவனுமாகிய கிறிஸ்துவை ஜனங்களுக்கெதிரே வைக்கிறது.

7. இந்த இரக்ஷகனால் உண்டான இரக்ஷிப்பின் வல்லமையை ஒவ்வொருவருக்கும் அளிக்கிறது.

---

## ஜப்பானிய கிறிஸ்து மார்க்கத்தின் அரை நூற்றூண்டுக் கொண்டாட்டம்.

1909-ம் ளு அக்டோபர் மீ 5—10 தேதிகளில் ஜப்பான் தேசத்தில் கிறிஸ்துமார்க்கம் ஸ்தாபகமாகி அரை நூற்றூண்டு ஆனதற்காக டொக்கியோ பட்டணத்தில் புரொடெஸ்தாந்து சபைகள் உற்சவங் கொண்டாடினர்கள்.

அப்பிரபலமான உற்சவத்தில் பேசின அநேக பெரியவர்களில் ஒண்டா என்னும் ஜப்பானிய கண்காணியாரும் ஒருவர். அவர் செய்த உபந்நியாசத்தில் கிறிஸ்து மார்க்கத்தால் ஜப்பான் தேசத்துக்குண்டான நன்மைகளைச் சவிஸ்தாரமாய் எடுத்துக் காட்டினர். அவற்றின் சுருக்கம் பின்வருமாறு. புரொடெஸ்தாந்து கிறிஸ்துமார்க்கம் ஜப்பானுக்கு வந்திராவிட்டால்

1. தேசத்தின் நாகரீகம் இப்போதிருக்கும் அத்தன்
மை புரோகதியடைந்திராது.
2. கிறிஸ்தவர்களுக்கு முந்தின காலங்களில் உண்டா
கிக் கொண்டிருந்த துன்பங்களுக்கு முடிவு இன்னமிராது.
3. பெண்களின் சுயாதீனம் நிறைவேறின காரிய
மாகாது.
4. இராஜாங்க அமைப்பு இப்போதிருக்கிறது போலி
ராமல் முற்றும் வேறு தன்மையதாயிருக்கும்.
5. ஜப்பானிய ஜனங்களின் மனோபீஷ்ட இலக்கு மிக
வும் தாழ்ந்தபடியிலிருந்து உயர்ந்திருப்பதுமில்லை.
6. சமுதாய விருத்தியும் தர்மஸ்தாபனங்களும் கிறிஸ்
தவ முயற்சியாலேயே முன்னுக்கு வந்திருக்கிறது.
7. கல்வி அபிவிர்த்திக்கும் மிசியோன் பாடசாலைகளே
வழிகாட்டியாயின.
8. சுதேச மார்க்கங்களில் அபிமானமும், மார்க்க விஷ
யங்களில் எண்ணக்கிளர்ச்சியும் மிசியோனரிகள் செய்கிற வேலை
யின் எதிர்மறையான பலனும்.
9. கிறிஸ்து மார்க்கம் ஜாதீய ஜீவியத்தின் எல்லாத்
துறையிலும் ஊடுருவிப் பிரவேசித்திருக்கிறது.

கிறிஸ்து மார்க்கம் ஜப்பானில் இன்னமும் இராச்சிய மார்க்கமாயிராவிடினும் இராசாங்கத்தார் அதற்குப் பல தடவைகளில் அநுசாரிகளாயிருந்ததுபோல் இக்கூட்டத்திலும் இராச்சிய உத்தியோகஸ்தரில் ஒருவராகிய கவுன்ட் ஒகூமா என்னும் பிரபு வந்து கிறிஸ்துமார்க்கத்தைப் பற்றிப் பின் வருமாறு சொன்னார்.

"நான் கிறிஸ்தவனல்லாவிடினும் கிறிஸ்துமார்க்கத்தால் என் ஜீவியத்தில் பல பெரும் மாறுதல்களையடைந்திருக்கிறேன். 1864-ம் ௵ டாக்டர் வெர்பெக் பண்டிதராகிய முதல் மிசியோனரியை முதல் முறை சந்தித்தேன். அவர் என் ஆங்கில உபாத்தியாயர். அவர் கிறிஸ்துமார்க்கத்தை நேராய்ப் போதியாதிருந்தும் அவரது கிறிஸ்தவ ஜீவியமே என் கண்முன் இடைவிடாது நிற்கும் மாதிரியாயிற்று. அப்பால் எனக்கொரு சத்திய வேதாகமமும் ஐக்கியமாகாண சரித்திரப் புஸ்தகமுங் கிடைத்தது. ஜப்பானியர் ஆங்கிலோ சாக்சருடைய நாகரீகத்தையே அடைய வாஞ்சித்து அதையடையும் நிலைமைக்குச் சமீபித்து வந்திருக்கிறார்கள். மிசியோனரிகள் இந்த நாகரீகத்தை எங்களுக்கு விளக்கும் வியாக்கியானிகளாயிருந்தார்கள். இன்னமும் எங்கள் தேசத்தில் செய்யப்படவேண்டியது அதிக முண்டு. தேசத்தின் மார்க்க விஷயத்தைப்பார்த்தால் அது பட்டினியால் சாகிறதென்னலாம். இவ்விஷயத்தில் தேசத்துக்கு நல்ல உணவையும் நல்ல



பானத்தையுந் தேடியடைவது மிகவும் முக்கியம். கடந்த 50 வருஷங்களில் நீங்கள் செய்த வேலைக்குப் புகழ்ச்சியைப்பெற நீங்கள் பாத்திரர். இனி வருங்காலத்தில் உண்டாகும் ஜெயமும் உங்களுடையதே. மார்க்க போதகங்களையுந் தர்க்கங்களையும் விட மார்க்கத்துக்கேற்ற ஜீவியமே அவசியம். வெர்பெக் பண்டிதருடைய போதனையைப் பார்க்கிலும் அவரது சாதனையே என் மனதில் கல்வெட்டாய்ப் பதிந்தது. இனிவரும் அடுத்த 50 வருஷங்களின் பலன் நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே இருக்கும்" என்பதே.

J. E. V.

## பண்டிதராமாபாயும் முக்தியும்.

பம்பாய்க்குப்போகும் வழியிலுள்ள முக்தியென்ற இடத்தில் பண்டிதராமாபாய் அம்மாளால் ஏற்பட்ட முக்தி மிசியோன் வேலையைக் குறித்துச் சில விசேஷங்களைப் பார்ப்போம்.

தமிழர் குடியிருக்க வசதியாய் ரஸ்தா ஓரத்தில் வரிசை வரிசையாயுள்ள அநேக வீடுகளும், அவைகளுக்கடுத்தாப்போல் ஆலச்சுவர்களால் சுற்றி அடைக்கப்பட்டதுமான ஒரு பெரிய தோட்டமும், அதிலிருக்குந் தூரவும் போய்ப் பார்ப்போர் கவனத்தைக் கவரத்தக்கன. இந்த ஜனங்களால் வெகு கேவலமாயெண்ணப்பட்ட பிராமண விதவையைக்கொண்டு கர்த்தர் நடப்பித்துவரும் அரியவேலை இவ்வளவு விர்த்திக்கு வந்திருப்பது ஆச்சரியமே. அந்தந்த வேலைக்கு ஏற்றவாறு அமைத்திருக்குங் கட்டடங்கள், செங்கற்களாலும் சுண்ணாம்பாலும் கெட்டிக்கார மேஸ்திரிகளைக்கொண்டு பஞ்சத்தில் அடிபட்டுவந்த பிள்ளைகளால் ஆனது வெகு நேர்த்தியாயிருக்கின்றன. கோயில் கட்டடம் வெகு அழகாயும் இராமாபாயம்மாள் கொடுத்த மாதிரிப்படியு முளதாம்.

இத்தோடு சேர்ந்த 240 ஏகரா நிலம் 10 தூரவுகளின் நீர்ப்பாய்ச்சலால் சாகுபடியாகிவருகிறது. ஒவ்வொரு துரவுக்கும் சென்ற செலவு ரூ 3000. துரவுகளின் நீர்ப்பாய்ச்சலுக்கு 80எருமை மாடுகள் வேலை செய்கின்றன. அவ்வித எருமைகள் எந்த மிசியோன் சேகரங்களிலும் அகப்படா.

கைத்தொழில் செய்யும் பெண்கள் 100 தறிவைத்து வேலை நடத்துகிறார்கள். அச்சுப்பதிக்கவும், புஸ்தகங்கள் கட்டவும் வெகு நேர்த்தியான இயந்திரங்களும் சாமான்களும் வைத்திருக்கிறார்கள். பெண்கள் மராஷ்டம், இங்கிலீஷ் கிரேக்கு, எபிரேய பாஷை எழுத்துக்களைப் பொறுக்கி வேலைசெய்கிறார்கள். ஒரு

யந்திரம் மா அரைக்கிறது. துரவுகளிலிருக்குந் தண்ணீர்க் குழாய்கள்வழியாய்த் தோட்டமெங்கும் பாய்கிறது. மிசியோன்வேலைக்கு அநுகூலமும் உறுதியுமானது ஏதேதுண்டோ அதெல்லாம் நடந்துவருகிறது. போவார் வருவாருக்குச்செய்யும் உபசரணைகள் அதிகம். யார்போனாலும் சாப்பாட்டுக்குக் குறைவில்லை. ரொட்டி, வெண்ணெய், பால், தேத்தண்ணீர் முதலிய பலவகை போஜனபதார்த்தங்கள் கொடுபடுகின்றன.

இந்த இடத்தில் சன்மார்க்க ஜீவியப் போங்கும் மெச்சத்தக்கது. இராமாறு செய்யுஞ் செபக்கூட்டங்களும், எல்லோரும் ஏகோபித்து ஜெபித்தலும் நடைபெற்று வருகின்றன. 1500 பெண்கள் சேர்ந்து கோவிலில் ஜெபிப்பது பார்ப்போர் மனதில் பக்தியை மூட்டுந் தன்மையுள்ளது. ஒய்வுநாள் கூட்டங்கள் வெகு சந்தோஷத்துக்கிடமானவை. இக்கூட்டங்கள் புத்திசாலிகளாயும், இந்த வேலைக்கென்றே தங்களைப் பிரதிஷ்டைப் பண்ணிக் கொண்டவர்களாயுமிருக்கிற பெண்களால் நடந்துவருகின்றன.

மேற்காட்டிய பெரிய வேலைகளுக்கெல்லாம் முகாமையாயிருந்து நடத்துகிறவர்கள் பண்டித ராமாபாய் அம்மாள் தான். இந்த அம்மாள் சாதாரண இந்துப் பெண்களைப்போல் உடுத்திக்கொள்ளுகிறார்கள். ஒவ்வொரு கூட்டத்திலும், மற்றப் பெண்களோடு பாயில் உட்காருகிறார்கள். தன்னைப் பார்க்க வருகிறவர்களைக் கண்டு பேச முதலாய் நேரமகப்படுவது கஷ்டமாயிருந்தும், எப்படியோ முந்தியாகிலும் பிந்தியாகிலும் அவர்களைக் கண்டு சந்தோஷத்தோடும் முகமலர்ச்சியோடும் சங்கதிகளைப் பேசியனுப்புவார்கள். அலுப்பு சலிப்பு உடையவளாய்க் காணப்படாமல் எல்லா வேலைகளையுந் தானே பார்த்துக்கொள்ளுஞ் சமர்த்தி. எல்லாக் கணக்குகளையும் தானே வைத்து நிர்வகிக்கும் மதியூகி. மாதமாதம் நடைமுதல் செலவுகளுக்கான 10,000 ரூபாயைத்தானே பட்டுவாடா செய்கிறாகள்.

புதிதாய் வாங்கும் ஒவ்வொரு எருமையையும் தானே பார்த்து வாங்குவார்கள். நெல் முதலியவைகளைத் தானே நோட்டம் பார்ப்பார்கள். சகல வேலைகளையும் தானே பொறுப்பாய்ப் பார்த்துக் கொள்ளுவார்கள். இவ்வேலைகள் எல்லாம் போதாது என்பதுபோல வேத மொழிபெயர்ப்பும் வேத வியாக்கியானமும் செய்துவருகிறார்கள். மராஷ்டிர மாணுக்கருக்கு எபிரேய பாடங்களைக் கற்றுக்கொடுத்து கிரேக்கு, எபிரேய பதங்களுக்கு மராஷ்டிர அகராதியொன்று தயார்செய்து வருகிறார்கள்.

இவ்வித வேலைகளில் எல்லாம் இந்த அம்மாளுக்கு விசேஷித்த உதவியாயிருப்பவள் இந்த அம்மாளின் மகள் மனோரமாபாய். இந்தப் பெண் அசாதாரண புத்திக்கூர்மையுள்ளவள்.



இராமாபாயம்மாள் தனக்கு நேரிடும் சகல விபத்துகளையும் ஜெபத்தால் மேற்கொண்டு தனக்கு ஆகவேண்டியவைகளையெல்லாம் ஜெபத்தில் பெற்றுக்கொள்ளுகிறார்கள்.

ஜெப ஜீவியத்தால் வேண்டியவைகளைப் பெற்றுக்கொள்ளுதல் வெறும் பேச்சு என்று சொல்லித் தர்க்கஞ் செய்வோர் முக்தியென்றவிடத்தில் ஜெபத்தால்நடந்துவரும் அரிய பெரிய வேலைகளைப் போய்ப் பார்த்துத் தெளிவடைவார்களாக.

---

## காருண்ணிய இராஜசக்கரவர்த்தியாகிய ஏழாம் எட்டுவர்ட்டுக்குண்டான பிராண மோசங்கள்.

நமது காருண்ணிய சக்கரவர்த்தியும் மகிமை தங்கிய இராஜாவுமானவருக்கு அவரது ஜீவியத்தில் எத்தனையோ பயங்கரமான அபாயங்களும் உயிர் மோசங்களும் நேரிட்டிருக்கின்றன.

1900-ம் ஹு போயர் ஜாதிகளோடு இங்கிலீஷ்காரர் போர் புரியுங்காலத்தில் ஸ்பீடோ என்னும் வாலிபன் அவரைக் கொலைபுரிய எத்தனித்தான். இராஜா தென்மார்க்குக்குப் போகப் புருசல்ஸ் வழியாய்ப் பிரயாணஞ் செய்தபோது இந்த வாலிபன் எப்படியோ றெயில்வேஸ்டேஷனில் தந்திரமாய்ப் பிரவேசித்து இராஜா ஏறிய வண்டி புறப்படுஞ் சமயத்தில் வண்டியின் மிதிப்பலகையில் நின்று இராஜாவின் தலையைக் குறி வைத்துச் சுட்டான். அவ்வளவு சமீபத்திலிருந்து சுட்டும், குண்டு அவர் மேல் படாமல் வண்டிப் பலகைகளில் புதைந்துபோனது ஆச்சரியமான தெய்வச் செயலே.

இன்னொருமுறை ஓர் போர் கப்பலில் விருந்துண்டு, கப்பலாட்கள் புதுப் பீரங்கி ஒன்றைச் சரிப்படுத்திக்கொண்டிருக்க வெகு கவனமாய் இராஜா பார்த்துக்கொண்டு நின்றார். பார்த்துவிட்டு ஏதோ காரணத்தால் இரண்டொரு அடி பின் வாங்க, பெரிய இயந்திரமொன்று (Windlass.) முறிந்து இராஜா நின்று கொண்டிருந்த இடத்துக்கு நேரே வெகு விசையாய்ச் சுற்றிக் கொண்டிருந்தது. இதைக் கண்ட கப்பல் உத்தியோகஸ்தர் ஒருவர், சக்கரவர்த்தியார் இரண்டொரு அடி பின் வாங்க இன்னம் ஒரு விநாடி மாத்திரம் தாமதித்திருப்பாரானால், உடனே அவர் மரித்திருப்பார் என்று சொன்னார்.

1871-ம் ஹு-ல் விஷசுரத்தால் பிடியுண்டு, அவருடைய நிலைமை வைத்தியர்களுடைய அபிப்பிராயத்தில் நம்பிக்கையற்றதாய்விட்டது. ஆகிலும் முழு நாடும் அவருக்காகச் செய்த ஜெபங் கேட்கப்பட்டு ஆச்சரியமாய்ச் சுகமடைந்தார்.

35 வருஷங்களுக்குமுன் இவர் இந்தியாவுக்கு விஜயஞ் செய்து இலங்கைத் தீவின் காடுகளில் வேட்டையாடி வருகையில் திடீரென எதிர்பாராவண்ணம் ஒரு யானை அவரைத்தாக்கியும், அவர் அஞ்சாமலும் கலங்காமலும் அதைக்குறி வைத்துச் சுட்டு அதன் கோபத்துக்குத்தப்பினர். இப்பயணத்தில் இன்னொரு விடத்தில் வேட்டையாடும்போது ஒரு புலியானது அவர் ஏறியிருந்த யானையைப் பின்புறத்தில் தாக்கி அவரையும் எட்டிப் பிடிக்க முயன்றது. ஆனால் அதன் நகங்கள் யானைமேல் விரிந்திருந்த விரிப்புத்துணிகளில் பிடிபட அத்துணி கிழிந்ததால், புலி தன் பிடியை இழந்து சறுக்கிப்போகவும் இராஜா தப்பவும் இடமாயிற்று.

இவரது பட்டாபிஷேகத்துக்குத் தடையாக நேரிட்ட பிராணாபத்தும், அதிலிருந்து அவர் அடைந்த விடுதலையும் நம் மனைவருக்குந் தெரியும்.

கடைசியாக அவர் ஒரு கப்பலின் மேல் தட்டில் உலாவும் போது ஒரு பெரிய எஃகு பாய்மரங் காற்றின் கோஷ்டியால் இடம் பெயர்ந்து இவர் நின்ற இடத்தில் விழுந்தும் இவர் சேதமின்றித் தப்பினதும் தெய்வச் செயலே. இவ்வாறு ஆச்சரியமான விதங்களில் தேவன் இராஜ சக்கரவர்த்தியின் உயிரைப் பலமுறை யுங் காத்திருக்கிறார். அவர்தாமே இவரைத் தமது நாம மகிமைக்கென்றும் பிரஜைகளின் வாழ்வுக்கென்றும் நீடூழி காப்பாராக.

C. P.

## வர்த்தமான சங்கிரகம்.

1. கடந்த வருஷத் துவக்கத்தில் இராஜ சக்கரவர்த்தியவர்கள் வாக்களித்த புதிய சீர்திருத்தங்கள் சென்ற நவம்பர் மீ 15-ம் வ முதல் அமுலுக்குவந்து அதின்படியே மாகாண சபைகளும், சட்ட சபைகளும் ஏற்பாடாகிவருகின்றன. நம்தேசத்தவர்கள் தங்களுக்குக் கிடைத்த இப் பெருஞ் சலாக்கியங்களுக்குப் பாத்திரராக நடந்துகொள்வது அவர்கள் மேல் விழுந்த பொறுப்பு.

2. பெரிய புத்தகம். ஸர்ஜேம்ஸ் மரே என்னும் பண்டிதர் ஆங்கிலேய பாஷையில் ஒரு அகராதிசெய்ய 1888-ல் துவக்கி இப்போது P என்னும் எழுத்துவரையில் வந்திருக்கிறார். அவர் அதை 1912 ம் ஆண்டு முடிப்பாராம். அதில் அடங்கிய எழுத்துக்களை வரிசையாக அடுக்கிக் கொண்டேபோனால் அவற்றின் நீளம் 116 மைல் தூரமாகுமாம். பத்திபத்தியாக அதன் பக்கங்களை அடுக்கினால் 2000 அடி உயரமாகுமாம்.

Printed at the Ev. Luth. Mission. Press, Tranquebar. 1910.

## தரங்கை தமிழ் வேதாகம சங்கம்.

### A. 1909-ம் வருஷத்தில் வந்த வரவு.

1. உண்டி சேர்ப்பு (on Reformation day).

| | Rs. | A. | P. | | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|---|
| Cuddalore ... ... | 2 | 4 | 0 | *Brought forward* | 56 | 0 | 2 |
| Chidambaram ... | 4 | 1 | 5 | Karikal ... ... | 0 | 6 | 0 |
| Vriddhachalam ... | 4 | 3 | 1 | Coimbatore Town | 1 | 15 | 6 |
| Kumbakonum ... | 0 | 11 | 2 | ,, District | 3 | 8 | 6 |
| Madras Pursavauk. | 11 | 0 | 0 | Udumalpet... ... | 2 | 0 | 9 |
| ,, Rayapuram | 4 | 0 | 0 | Madura ... ... | 3 | 3 | 11 |
| Tiruvallur ... ... | 0 | 4 | 0 | Pereiur ... ... | 1 | 1 | 4 |
| Sriperumbathur ... | 0 | 2 | 0 | Viruthupatti ... | 3 | 1 | 4 |
| Manikramam 1907 | 1 | 8 | 3 | Colombo ... ... | 1 | 0 | 0 |
| ,, 1908 | 1 | 3 | 6 | Aneikadu ... ... | 2 | 7 | 0 |
| ,, 1909 | 1 | 0 | 0 | Pudukottah ... | 0 | 2 | 10 |
| Porayar ... ... | 2 | 5 | 4 | Pandur ... ... | 1 | 12 | 1 |
| Villapuram ... | 0 | 13 | 8 | Mayaveram ... | 3 | 13 | 1 |
| Panrutti ... ... | 0 | 1 | 6 | Panampalli ... | 0 | 8 | 0 |
| ,, Kilmanpatti | 0 | 3 | 0 | Manelmedu ... | 0 | 10 | 6 |
| Bangalore ... ... | 4 | 12 | 6 | Erode ... ... | 2 | 12 | 2 |
| Chingleput... ... | 1 | 9 | 1 | Yercaud ... ... | 0 | 12 | 9 |
| Negapatam ... | 1 | 8 | 0 | Rangoon ... ... | 1 | 0 | 9 |
| Tanjore ... ... | 7 | 11 | 6 | ,, ... ... | 4 | 4 | 3 |
| Trauquebar ... | 6 | 10 | 2 | ,, ... ... | 9 | 15 | 7 |
| | | | | Penang ... ... | 2 | 4 | 1 |
| *Carried over.* | 56 | 0 | 2 | *Total.* | 102 | 12 | 7 |

2. கையொப்பப் பணமும் நன்கொடைகளும்.

| | Rs. | A. | P. |
|---|---|---|---|
| Bible Society of Saxony ... ... ... ... | 750 | 0 | 0 |
| Donation from Moscow ... ... ... | 13 | 11 | 7 |
| Rev. J. Arockiam 06 - 07 ... ... ... ... | 1 | 0 | 0 |
| ,, S. Abraham 08 ... ... ... ... ... | 1 | 0 | 0 |
| ,, P. Arulappan 06 - 08 ... ... ... ... | 1 | 8 | 0 |
| ,, N. Mutthusamy 08 ... ... ... ... | 0 | 8 | 0 |
| ,, G. Samuel 08 - 09 ... ... ... ... | 1 | 0 | 0 |
| ,, M. Joseph 08 ... ... ... ... ... | 0 | 8 | 0 |
| ,, H. Schomerus 08 ... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, A. Fehlberg 06 - 08 ... ... ... ... | 9 | 0 | 0 |
| ,, R. O. Handmann 08 ... ... ... ... | 2 | 0 | 0 |
| ,, M. Wannske 08 ... ... ... ... | 1 | 0 | 0 |
| ,, S. Mutthusamy 08 ... ... ... ... | 1 | 0 | 0 |
| *Carried over.* ... | 785 | 3 | 7 |

| | Rs. | A. | P. |
|---|---|---|---|
| *Brought forward.* ... | 785 | 3 | 7 |
| Rev. G. J. David 08 ... ... ... ... ... | 1 | 0 | 0 |
| „ S. Zehme 08 - 09 ... ... ... ... | 4 | 0 | 0 |
| „ R. Schomerus ... ... ... ... ... | 3 | 0 | 0 |
| „ H. Beisenherz... ... ... ... ... | 3 | 0 | 0 |
| „ T. S. S. Jacob... ... ... ... ... | 1 | 0 | 0 |
| „ N. Samuel ... ... ... ... ... | 1 | 0 | 0 |
| „ T. Muttiappen ... ... ... ... ... | 0 | 8 | 0 |
| C. Schulz Esqr. 04 - 08 ... ... ... ... | 5 | 0 | 0 |
| Sister Auguste Hensolt ... ... ... ... | 2 | 0 | 0 |
| Cand. Ambrose 08 ... ... ... ... ... | 1 | 0 | 0 |
| Rangoon donation ... ... ... ... ... | 4 | 0 | 0 |
| Tanjore „ ... ... ... ... ... | 5 | 0 | 0 |
| Villupuram Matthew Cate ... ... ... ... | 0 | 8 | 0 |
| „ Daniel Pillai Ameen ... ... ... | 0 | 8 | 0 |
| „ Theophil Cate ... ... ... ... | 0 | 2 | 0 |
| *Total.* ... | 816 | 13 | 7 |

B. 1909-ம் ௵ ஜனுவரி முதல் டிசம்பர் வரைக்குமுள்ள கணக்குகள்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| போன வருஷத்துப் பாக்கிக் கையிருப்பு ... ... | | | | 2294 | 14 | 2 |
| சீர்திருத்தற் பண்டிகை உண்டி சேர்ப்பு ... ... | | | | 102 | 12 | 7 |
| கையொப்பப் பணமும் நன்கொடைகளும் ... ... | | | | 816 | 13 | 7 |
| வட்டி வரவு ... ... ... ... ... ... | | | | 74 | 10 | 6 |
| வேதாகம விற்பனைக் கிரய வரவு ... ... ... | | | | 100 | 1 | 0 |
| சில்லறை வரவு ... ... ... ... ... | | | | 2 | 8 | 0 |
| | | | | 3391 | 11 | 10 |
| விற்பனைக்கு வாங்கின வேதாகமங்களின் கிரயம் | 39 | 11 | 0 | | | |
| பழைய ஏற்பாட்டை அச்சிடுகிறதற்கு அச்சாரம் | 957 | 8 | 0 | | | |
| | | | | 997 | 3 | 0 |
| | | | | 2394 | 8 | 10 |

C. மேற்படி தொகை காக்கப்பட்டிருக்கும் விதம்.

| | | | |
|---|---|---|---|
| Government Securities ... ... ... ... | 1000 | 0 | 0 |
| „ Savings Bank இல் இருக்கிறது ... | 1378 | 9 | 5 |
| கையிருப்பு... ... ... ... ... ... | 15 | 15 | 5 |
| | 2394 | 8 | 10 |

H. Beisenherz,
*Treasurer.*

